20th January 1961]

done now and within which time a meeting could not be held comfortably with sufficient audience to listen to speeches made in the meeting?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no information about this matter. If the hon. Member puts a separate question, I shall answer it.

*Hill allowance*

*** 25 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 22-8-1960-ல் 279-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி ஜவ்வாது மலை போன்ற பிரதேசங்களில் உள்ள உத்தியோகஸ்தர்களுக்கு மலைவாச அலவன்ஸ் கொடுக்கப்படுமா ?

(இ) அப்படியாயின் அதன் விபரமென்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) There is no such proposal under the consideration of Government.

(இ) Does not arise.

**SRI S. M. ANNAMALAI :** ஜவ்வாது மலைக்கு உள்விவகார அமைச்சர் சென்றுவிட்டு பிறகு மலைவாச அலவன்ஸ் ரத்து செய்யப்பட்டது. அதன் காரணமாக உத்தியோகஸ்தர்கள் அங்கு போக மறுக்கிறார்கள். எல்லா காட்டு அதிகாரிகளும் ஒன்றுகூடி இதைப்பற்றி தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள். ஆகையால் மலைவாச அலவன்ஸ் கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மலைப்பிரதேசத்தில் சுகாதாரக் குறைவு இருக்கக்கூடிய இடங்களில் அலவன்ஸ் கொடுக்கப்பட்டுவந்தது. ஜவ்வாது மலையில் மலேரியா போன்ற பல வியாதிகள் இருந்த காரணத்தால், அன்ஹெல்தி லோக்காலிட்டி அலவன்ஸ் கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது ஜவ்வாது மலையில் சுகாதார குறைவு இல்லாததோடு சுகாதாரத்திற்காகவே இங்கு போகக்கூடிய நிலைமை ஏற்பட்டிருப்பதால் இந்த அலவன்சுக்கு இப்பொழுது தேவையில்லை.

*Secondary Grade teachers*

*** 26 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 19—4—1960-ம் தேதி நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 739-க்கு அளித்த பதிலையொட்டி எத்தனை செகண்டரி கிரேடு ஆசிரியர்கள் ஹையர் கிரேடு சம்பளம் பெற்று வேலை செய்கிறார்கள்?

(இ) அவர்களில் எத்தனை பேர் 4, 3, 2 ஆண்டுகள் சர்வீஸ் உள்ளவர்கள் ?